# ஸ்ரீ ராமாநுஜன் — 120

மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் சார்பாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர் :

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் **அண்ணங்கராசாரியர்.**

ஸம்புடம் 10 ◊ விலம்பி௵ மார்கழிமீ 1958 டிசம்பர்மீ ◊ ஸஞ்சிகை 12


## திருவாய்மொழி நூற்றந்தாதி 12.

திண்ணிதா மாறன் திருமால் பரத்துவத்தை
நண்ணி யவதாரத்தே நன்குரைத்த—வண்ணமறிந்து
அற்றார்கள் யாவர் அவரடிக்கே யாங்கவர்பால்
உற்றாரை மேலிடாதூன்.

| | | | |
|---|---|---|---|
| மாறன் | நம்மாழ்வார் | அறிந்து | தெரிந்துகொண்டு |
| திருமால் பரத்துவத்தை | எம்பெருமானுடைய பரத்வத்தை | அவர் அடிக்கே | அவ்வாழ்வார் திருவடியிலேயே |
| அவதாரத்தே நண்ணி | அவதாரத்தில் அநுபவித்து | அற்றார்கள் யாவர் | ஈடுபட்டிருப்பார் யாவரோ, |
| திண்ணிதுஆ | திடமாகவும் | அவர்பால் உற்றாரை | அவர்களிடத்தில் ப்ணிந்திருப்பவர்களை. |
| நன்கு | நன்றாகவும் | ஊன் | தேஹஸம்பந்தம் |
| உரைத்த | அருளிச்செய்த | மேலிடாது | சேராது. |
| வண்ணம் | ரீதியை | | |

*திண்ணன் வீடுபதிகத்தில் ஆழ்வாரருளிச்செய்த பகவத்பரத்வத்தை அறிந்து கொண்டு ஈடுபட்டிருப்பவர்களுடைய ஸம்பந்த ஸம்பந்திகளும் வாழப்பெறுவர் என்கிறது. "திண்ணிதாம் மாறன்" என்று பிரித்து மாறனுக்கு விசேஷணமாக்கி யுரைத்தார் பிள்ளைலோகஞ்சீயர். பரத்வே பரத்வவிஷயமான உயர்வற வுயர்நலத்திற் காட்டில் இத்திருவாய்மொழிக்குண்டான வாசி விளங்குவதற்கு 'அவதாரத்தே நண்ணி' என்றார். ஆங்கு—அசை. "அவரடிக்கே அற்றார்கள் யாவர்" என்று கொண்டுகூட்டுப் பொருள்கோள். ... ... ... ... *

* வாயுந்திரையுகளுமென்கிற கீழ்த்திருவாய்மொழியில் ஆழ்வார்க்கு உண்டான நிலைமை லோகவிலக்ஷணமாக விருந்தது. பேச்சுக்கு நிலமல்லாத ஆற்றாமையிலே இருந்தார். ஆற்றாமை கரைபுரண்டதாகுங்காலத்திலே எம்பெருமான் வந்து முகங்காட்டி ஆச்வஸிப்பித்தல் முறைமையாதலால் அவன் அங்ஙனமே வந்து முகங்காட்டினன்; உடனே அந்த ஆற்றாமை போனவிடந் தெரியாமே போயிற்று. உடனே தேறுதலடைந்த ஆழ்வார், எம்பெருமானுடைய பரத்வம் ஸௌலப்யம் என்கிற இரண்டு குணங்களிலே ஸௌலப்யமானது பேசப்பேச உருகப்பண்ணு

மதாதலால், 'இப்போதுதான் சிறிது தேறுதலடைந்த நாம் அந்த ஸௌலப்ய குணத்தைப்பேசி நெஞ்சழியவொண்ணாது; * நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னுமீனச்சொல்லே * என்கிறபடியல்லாமல் தரித்துநின்று பேசலாம்படியான பரத்வத்தைப்பற்றிப் பேசுவோம்' என்றெண்ணி அதனைப் பேசுகிறார் இத்திருவாய்மொழியில்.

* உயர்வறவுயர்நலம் என்கிற முதல் திருவாய்மொழியிலும் பரத்வம் பேசப்பட்டிருந்தாலும் இங்குப் பேசுகிறபடியில் வைலக்ஷண்யமுண்டு. அங்கு ஸ்வாநுபவரூபமாகவே சென்றது; இங்கு உபதேசரூபமாகவுமுள்ளது. அங்கு அந்வயமுகத்தால் அருளிச்செய்யப்பட்டது; இங்கு அந்வய வ்யதிரேகங்களிரண்டினாலும் அருளிச் செய்யப்படுகிறது. [எம்பெருமானே பரத்வமுடையவன் என்று சொல்லுதல் அந்வயமுகத்தாலே சொல்லுதல். எம்பெருமானைத் தவிர்த்து மற்றையோர்க்குப் பரத்வம் அஸம்பாவிதமென்று நிரூபித்தல் வ்யதிரேகமுகத்தாலே சொல்லுதல்.] அங்குப் பெரும்பாலும் உபநிஷத்துக்களை அடியொற்றி அருளிச்செய்தார்; இங்கு இதிஹாஸ புராண ப்ரக்ரியையாலே அருளிச்செய்கிறார். அங்குப் பரத்வத்திலே பரத்வமருளிச்செய்தார்; இங்கு அவதாரத்தில் பரத்வமருளிச்செய்கிறார்—என்று இங்ஙனே பல வாசிகள் காண்க.

ஒரு குணத்தையே பலகாலும் அநுபவித்தாலும் தெகுட்டும் விஷயமன்றே. "எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழிதொறும், அப்பொழுதைக்கப்பொழுது என்னாராவமுதமே" என்றன்றோ ஆழ்வார்தாமருளிச்செய்வது. எம்பெருமானுடைய திவ்ய சேஷ்டிதங்களோ திவ்ய அவயவங்களோ திவ்யாத்மஸ்வரூபமோ திவ்ய குணங்களோ ஒருகால் அநுபவிக்கப்பட்டாயிற்றேயென்று புநருக்தி தோஷ சங்கையினால் மறுபடியும் பேசப்படாதொழியில் இவ்விஷயம் அவிலக்ஷணம் என்றதாகுமத்தனை: விலக்ஷண விஷயங்களை ப்ரகாரபேதமிருந்தோ இல்லாமலோ எத்தனை தடவை பேசினாலும் புநருக்தி தோஷமாகாதென்பது ஞாபகமிருக்கத்தக்கது.

இங்கே நம்பிள்ளை யீடு காண்மின் ;—

"ஒருகாற் சொன்னோம் என்று கைவாங்கி யிருக்கவல்லரல்லர் இவர்; ஒருகாற் சொல்லிற்றென்று கைவாங்கலாம் விஷயமன்று அது. இனித்தான் பகவத்விஷயத்தில் புநருக்தி தோஷாயவாகாது. ஒரு குணத்தையே எக்காலமும் அநுபவிக்கவல்லாரொருவர் இவர்; ஒரு குணந்தன்னையே 'இதுக்கு முன்பு அநுபவிப்பித்தது இக்குணம்' என்று தோற்றாதபடி க்ஷணந்தோறும் புதுமைபிறப்பித்தநுபவிப்பிக்கவல்லானொருவனவன்."

பேசினதையே மற்றொருகால் மீண்டும் பேசுமிடங்களெங்கும் ஒவ்வொரு வாசியிருப்பதுபோலவே இத் திருவாய்மொழிக்கும் * உயர்வறவுஉயர்நலத்திற் காட்டில் நெடுவாசியுண்டென்பது குறிக்கொள்ளத்தக்கது. ... ... ... *

---

## வைதிக மநோஹரா

ஸ்ரீராமாநுஜன் போலவே வைதிக மநோஹரா என்னும் ஸம்ஸ்க்ருத பத்திரிகையும் நம்மால் மாதந்தோறும் பிரசுரம் செய்யப்பட்டு வருகின்றதென்பதைப் பலருமறிவர். இதில் நூறு ஸஞ்சிகைகள் இதுவரை வெளியாகியுள்ளன. நூற்றோராவது ஸஞ்சிகை ஸமீப காலத்தில் வெளிவரப் போகிறது. மிக அருமையான ஸம்ஸ்க்ருத வியாஸங்கள் இதில் வெளிவருகின்றன. வருடச் சந்தா 3 ரூபா.

**க்ரந்தமாலா ஆபீஸ், விஷ்ணுகாஞ்சீ.**

ஸ்ரீ:

# புநர்வஸூ பரீக்ஷணம்.

புநர்வஸூவென்னும் பத்ரிகையின் சென்ற ஐப்பசி மாதத்து இதழ் மார்கழி மாதத்திலே வரப்பெற்றோம். அதில் "ஸ்ரீராமாயணமும் ஜீவாத்மாவும்" என அசடு பிசடான வொரு மகுடம் புனையப்பெற்ற நீரஸமான வியாஸமொன்றை வாசிக்கப் பெற்றோம். ஸ்ரீவசநபூஷணத்தில் உபக்ரமத்திலேயே

"பிராட்டி முற்படப் பிரிந்தது தன்னுடைய க்ருபையை வெளியிடுகைக்காக; நடுவில் பிரிந்தது பாரதந்த்ர்யத்தை வெளியிடுகைக்காக; அநந்தரம் பிரிந்தது அநந்யார்ஹத்வத்தை வெளியிடுகைக்காக."

என்கிற திவ்ய ஸ்ரீஸூக்தியுள்ளது. இதில் ஸீதாபிராட்டிக்கு மூன்று பிரிவுகள் காட்டப்பட்டு, அம் மூன்று பிரிவுகளிலும் மூன்று திருக்குணங்கள் வெளியிடப் பட்டதாகவும் காட்டப்பட்டுள்ளது.

பிராட்டிக்கு மூன்று பிரிவுகளாவன—(1) தண்டகாரண்யத்தி லெழுந்தருளி யிருக்கச் செய்தே ராவணன் பிரித்தானென்றொரு வியாஜத்தினாலே பிரிந்த பிரிவு முதற் பிரிவு. (2) இரண்டாம் பிரிவாவது-மீண்டு பெருமாளுடனே கூடித் திருவயோத்தியிலே யெழுந்தருளித் திருவயிறு வாய்த்திருக்கிற காலத்திலே உனக்கு அபேக்ஷை ஏதென்று பெருமாள் கேட்டருள, பிராட்டி தனக்குண்டான வனவாஸ விருப்பத்தை விண்ணப்பஞ் செய்ய, அதற்காகப் போக விடுவாரைப் போலே லோகாபவாத பரிஹாரார்த்தமாகப் பெருமாள் காட்டிலே போகவிட, அதனால் நேர்ந்த பிரிவு. (3) இனி மூன்றாம் பிரிவாவது, வான்மீகி முனிவரின் ஆச்ரமத்திலிருந்து மீண்டு பெருமாள் ஸன்னிதியிலே வந்திருக்கச் செய்தே பிறந்தகத்திலே புக்கதனாலே நேர்ந்த பிரிவு. ஆக இங்ஙனம் நிகழ்ந்த மூன்று பிரிவுகளில் முறையே க்ருபையும் பாரதந்திரியமும் அநந்யார்ஹத்வமுமாகிற மூன்று குணங்கள் வெளியிடப்பட்டனவாகப் பிள்ளை லோகாசாரியர் அருளிச் செய்துள்ளார். இதனை விசதவாக் சிகாமணிகளான மணவாள மாமுனிகள் இனிமையே வடிவெடுத்த திவ்ய ஸூக்திகளாலே வெகு அற்புதமாக விவரித்தருளியுள்ளார்.

இவ்விஷயங்களை யெடுத்தெழுதக் கருதிய வொரு பண்டிதர் 'ஸ்ரீராமாயணமும் ஜீவாத்மாவும்' என்று அநந்விதமான வொரு மகுடத்தை யிட்டுக் காடுபாய்ந்து எதையோ எழுதிப்போகிறார். அதைப்பற்றி நமக்குக் கவலையில்லை. மணவாள மாமுனிகளின் திவ்யஸூக்தியை உருமாற்றி ரஸபங்கம் செய்திருப்பது மிகவும் வருந்தத் தக்கதாதலின் இந்த வருத்தத்தை நாம் உள்ளடக்கி நிற்ககில்லாமல் உலகுக்குத் தத்துவத்தை விளக்கிக்காட்டும் முகத்தால் ஒருவாறு நமது வருத்தம் தணியப் பெறுகிறோம்.

மேலே குறித்த புனர்வஸூவிதழில் (பக்கம் 12-ல்) 'இதுவே இரண்டாம் பிரிவாகும்' என்றதற்குப்பிறகு

"இராமபிரான் கட்டிலிலே வைத்தபோதோடு காட்டிலே விட்டபோதோடு வாசியற அப்பிரானுடைய திருவுள்ளக் கருத்தையே பின்பற்றிச் செல்ல வேண்டும்படியான தன் பாரதந்திரிய நிலையைப் பிரகாசப்படுத்துதலே யாம்."

என்றும்; அதற்கு மேலும்

"கட்டிலிலே வைத்த போதோடு......என்பதைச் சிறிது விளக்குவோம்."

என்றும் எழுதப்பட்டுள்ளது. சிறிது விளக்குவோமென்று அவதாரிகை யிட்டு விளக்கியிருக்குமழகின் அழகை அழகிய மதியுடையார் அழகாகக் காணவேணும்.

அங்கு எடுத்துக் காட்டிய கம்பர் செய்யுளில் மூன்றுமடி எவ்வளவு அழகியதோ அவ்வளவழகியதென்று அதை ஒரே வார்த்தையில் முடித்துவிடலாம். அது கிடக்க; மணவாள மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தியென்று காட்டாமல் தம்முடைய உக்திபோல் எழுதியுள்ளவற்றில் "கட்டிலிலே வைத்தபோதோடு காட்டிலே விட்டபோதோடு வாசியற" என்கிற வாக்கியம் மிகவும ரஸாபாஸமானது. இஃது ஒரு முறை உதாஹரிக்கப்பட்டிருந்தால் அச்சுப்பிழைபோலுமென்று அநாதரித்துவிடலாம். ஒரு முறைக்கு இருமுறை ஒரேரீதியாக எழுதப்பட்டிருப்பதால் 'இது அச்சுப் பிழையன்று, ஹல்லுப் பிழையே' என்னத் தட்டில்லை.

மணவாள மாமுனிகளின் திவ்ய ஸூக்தி ஸந்நிவேசம் இங்ஙனேயன்று. "கட்டிலே வைத்த போதோடு காட்டிலே விட்டபோதோடு வாசியற" என்பதே மாமுனிகளின் திவ்ய ஸூக்தி உள்ளவாறிருக்கும்படி. திருமழிசை அண்ணவப் பங்கார்ஸ்வாமியின் அரும்பதவுரையில் இதற்கு விவரணமுள்ளவாறு இங்ஙனே—;

"[கட்டிலே வைத்தபோதோடு......]* யா ந சக்யா புரா த்ரஷ்டும் பூதை ராகாசகைரபி* என்னும்படி அந்தஃபுரத்திலே அஸூர்யம் பச்யையாகக் காவ லிட்டு வைத்த போதோடு...*ராஜமார்க்கதா ஜநா:* என்கிறதுக்கும் மேற்பட ஆரண்யகர்கள் காணும்படி காட்டிலேவிட்ட போதோடு. இத்தால் கட்டுக்கும் காட்டுக்கும் ஆகாரபேதமித்தனையல்லது பதிசித்தாநுவிதாநபரையான பிராட் டிக்கு அவற்றில் ரஸபேதமில்லை யென்றபடி."

என்பன அரும்பதவுரையில் வாக்கியங்கள். இத்தால் "கட்டிலே வைத்தபோதோடு" என்பதுதான் மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தியென்று எளிதில் அறுதியிடலாகும். மேலேயுதாஹரித்த அரும்பதவுரை வாக்கியத்தில் "அந்த:புரத்திலே" என்றிருப் பதைக் கண்டு மயங்கியே புநர்வஸூபண்டிதர் 'கட்டிலிலே' என்று எழுதிவிட்டா ரென்று அறுதியிடவும் தட்டில்லை. அந்த வாக்கியத்தில் "காவலிட்டு வைத்த போதோடு" என்பது தான் உயிரானது. 'கட்டிலே வைக்கையாவது காவலிட்டு வைக்கை' என்று விவரித்ததாயிற்று.

பலவாண்டுகட்கு முன்பு ஸ்ரீ வசநபூஷண வியாக்கியானம் தமிழ்லிபியிலும் தெலுங்கு லிபியிலும் பதிப்பிக்கப்பெற்றிருப்பதுண்டு; அப்பதிப்புகளில் "நாட்டிலே வைத்த போதோடு காட்டிலே விட்ட போதோடு வாசியற" என்கிறபாடம் காண் கிறது. இதை நோக்கும்போது 'மணவாள மாமுனிகள் இப்படியும் அருளிச் செய்திருக்கக்கூடும்' என்று தோன்றுகின்றதேயல்லது இதில் விசேஷமான அநுபபத்திதோன்றவில்லை. ஆனாலும் ஓலை ஸ்ரீ கோசங்களில் இப்பாடம் காண வில்லை. அரும்பதவுரைக்கும் சேர்ந்ததன்று. எனினும் இப்பாடம் மறுக்கத் தக்கதன்று. 'கட்டிலிலே' என்பது மிகத்தவறு. மணவாள மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தி சைலியே யன்றிது. எதிலும் மருளே வடிவெடுத்தவர்களின் கற்பனைப் பாடமேயிது.

ஏன்? 'கட்டிலிலே' என்றிருந்தால் என்ன பிசகு? என்கிற கேள்வி எழுமா யின் எழுக. பிறகு அதைப்பற்றி விரிவாக வுணர்த்துவோம். இந்த வியாஸத் திலேயே, முன்னே "கிழங்கு காய் கனி இவற்றைப் புஜிப்பவரும்" என்றவிடத்து அச்சுப்பிழையாக 'பூஜிப்பவரும்' என்று விழுந்திருக்கிறது; அது போலவே இதுவும் அச்சுப்பிழையே என்பரேல்; அதைப் புநர்வஸூவின் அடுத்த இதழில் திருத்திக் காட்டுவது தக்கது. ஒரு முறைக்கு இருமுறை 'கட்டிலிலே' என்றே யிருப்பதனால் இது மருளினாலாய பிழையேயென்று கொண்டு நாம் இத்தனை யெழுத நேர்ந்தது. ... ... ... ... ... *

---

# " திருக்கோயில் "

சென்னை அரசாங்க அறநிலையப் பாதுகாப்புத்துறை வெளியீடாகத் " திருக்கோயில் " என்னும் பெயர்பூண்ட மாதப்பத்திரிகை தோன்றியுள்ள தென்பதைப் பலருமறிந்திருப்பர். இப்பத்திரிகை மிகமிக அவசியமானது. இது மேன்மேலும் வளர்ச்சி பெற்று விளங்கவேணுமென்பது நமது மனப்பூர்வமான கோரிக்கை. நிகழும் டிசம்பர் மாதத்துப் பத்திரிகை நமக்கு ஒரு நண்பர் மூலமாகக் கிடைத்தது. அதில் சில பக்கங்களைமட்டுமே படிக்க நமக்கு அவகாசம் ஏற்பட்டது. வைணவம் என மகுடமிட்டு [திரு. T. A. சீனுவாசாச்சாரியார்] எழுதியதாக வெளிவந்துள்ள வியாஸத்தில் மணவாள மாமுனிகளைப்பற்றி யெழுதிவருகையில் " இவர் ஈடு முப்பத்தாறுயிரம் அருளியவர். ஈடு முப்பத்தாறுயிரப் பெருக்கு எனவும் கூறி இவரைச் சிறப்பிப்பர் " என்றெழுதப்பபட்டுள்ளது.

ஈடு முப்பத்தாறுயிரம் அருளியவர் மணவாளமாமுனிகள் அல்லர். இவர்க்கு நூறுண்டுகட்கு முன்னே வாழ்ந்திருந்த வடக்குத் திருவீதிப் பிள்ளை யென்னு மாசிரியரே அதனை யருளிச் செய்தவர். இதனை மாமுனிகள் தாமே தாமருளிய உபதேச ரத்தினமாலையில் " தெள்ளியதா நம்பிள்ளை செப்பு நெறிதன்னை, வள்ளல் வடக்குத் திருவீதிப்பிள்ளை, இந்த நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்தது, ஈடு முப்பத்தாறுயிரம்." என்னும் பாசுரத்தினுல் விளக்கியருளியுள்ளார். மேலும், மாமுனிகளுக்கு 'முப்பத்தாறுயிரப் பெருக்கர்' என்று ப்ரஸித்தியே யொழியப் 'பெருக்கு' என்றல்ல. இச்சொல் அந்வயிப்பதரிது. மேலும் மாமுனிகள் அவதரித்தது ஆழ்வார் திருநகரியிலேயே. " அழகான குருகூரிலவதரித்த பெருமாள்" என்பது அந்நாள் தொடங்கி அநுசந்திக்கப்பட்டு வரும் சந்தை. உண்மை இங்ஙன மிருக்க ஒரு கிராமத்தில் அவதரித்ததாக எழுதியிருப்பது முறையன்று.

பிள்ளை லோகாசாரியரைப்பற்றி யெழுதிவருகையில் " மணிப்பிரவாள நடையிலே ரகசியங்கள் என்னும் பெயரால் பதினெட்டு நூல்களை அருளிச் செய்யலுற்றார் " என்றெழுதி, உடனே " மேலும் உண்மைப் பொருள்களை சித், அசித், ஈசுவரன் என்று பெயரிட்டு வழங்கலானார் " என்றெழுதப்பட்டுள்ளது, சித், அசித், ஈசுவரன் என்ற சொற்கள் வேதாந்தங்களிலும் இதிஹாஸ புராணங்களிலும் பிரசித்தமாகப் பயிலுஞ் சொற்களேயல்லது பிள்ளை லோகாசாரியர் தாமாக இங்ஙனே பெயரிட்டு வழங்கத் தொடங்கினரல்லர்.

இதற்குமேல் " ஸ்ரீவசநபூஷணம் முமுக்ஷுப்படி முதலிய நூல்கள் இவரருளிய வேறு சிறந்த நூல்களாகும் " என்றெழுதப்பட்டுள்ளது. இவ்வாசிரியர் அஷ்டாதச (18) ரஹஸ்யங்களை யருளிச்செய்தவரென்று கீழே விளக்கியானபின்பு, அவற்றிலேயே சேர்ந்தவைகளான ஸ்ரீவசனபூஷண முமுக்ஷுப்படிகளை வேறு நூல்களாகக் குறிப்பிட்டது பொருந்துவதன்று.

ஸ்ரீவேதாந்த தேசிகரைப்பற்றி யெழுதி வருகையில் " இவரைத் தொடர்ந்து தென்கலைசம்பிரதாயம் ஏற்பட்டது " என்றெழுதப்பட்டுள்ளது. இதன் கருத்து இன்னதென்று விளங்கவில்லை. அன்றியும் " இவருக்குப் பிறகு சம்பிரதாய முறைகளின்படி ஆசாரியபரம்பரை வேறுபடலாயிற்று " என்றும் எழுதப்பட்டுள்ளது. இவ்வாக்கியத்தில் " இவருக்குப் பிறகு " என்றது தேசிகருக்குப் பிறகு என்றபடி. தேசிகருக்கு முந்நூறு வருடங்களுக்கு முந்தி வாழ்ந்தவரான ஸ்ரீராமாநுஜரிடமிருந்தே ஆசார்ய பரம்பரை வேறுபட்டிருக்கின்ற தென்பது வைணவ வுலகமறிந்தது. தேசிகருக்குப்பிறகு ஆசார்யபரம்பரையே கிடையாது.

இங்ஙனே நாம் சில விஷயங்களை யெடுத்துக் காட்டுவதை அப்பத்திரிகைக்குக் குற்றங் குறைகள் கூறுகிற முறையில் கொள்ளலாகாது. இத்தகைய விஷயங்கள் மிகுந்த ஜாக்ரத்தையுடன் தகுந்த அதிகாரிகளைக் கொண்டு எழுதுவித்துப் பிரசுரம் செய்யப்படவேணுமென்று நாம் அன்புடன் எச்சரிக்கை செய்வதாகக் கொள்ளுதல் நன்று. ... ... ... ... ... *

# ஓர் ஆனந்தச் செய்தி

புதுடில்லியில் வாழும் ஸ்ரீமதுபயவே. டாக்டர். ஸர். K. S. கிருஷ்ணன் ஸ்வாமியை அறியாதவர்களில்லை. இம்மஹானுக்கு, ஸமீபத்தில் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம் டில்லிமாநகரில் அவருடைய திருமாளிகையிலும் மற்றும் பல விடங்களிலும் பலபல பிரமுகர்களின் ஸஹயோகத்தில் லோகோத்தரமான முறையில் கொண்டாடப்பட்டது. அந்த ஸமய விசேஷத்தில் உடனிருந்து கிஞ்சித் கரித்துக் களிக்கப்பெறாத குறைதீர அடியேன் மங்களாசாஸன பத்ரிகை யொன்றை யனுப்பியிருந்தேன். அதனை அங்குள்ள ஆப்தர்கள் மஹா ஸபையிலே வாசித்து எல்லாரையும் களிப்பித்தார்களென்று செய்தி யறிந்தோம். அப் பத்திரிகை வருமாறு :—

ஸ்ரீமான் உ. வே. Dr. Sir. ஸ்ரீ கிருஷ்ணன்ஸ்வாமிக்கு அறுபதாண்டு நிறைவு மஹோத்ஸவம் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுமிந்த அரிய பெரிய ஸந்தர்ப்பத்தில் அடியேனும் சிறிது ஸத்தை பெறுகின்றேன். பெருமகிழ்ச்சியோ டிருக்குமிந்த ஸமயத்தில் ஒரு சிறிய வருத்தமும் தோன்றுகிறது. 60, 61, 62 என்றிப்படி வயது ஏறிக்கொண்டே போவதனால் நாளடைவில் திருமேனியில் தளர்ச்சியுண்டாகி லோகோபகாரங்கள் குறையத் தொடங்குமோவென்கிற அச் சத்தினாலாய வருத்தமே அது. ஞான வ்ருத்தர், சீல வ்ருத்தர், வயோ வ்ருத்தர் என்று மூவகைச் சிறப்புக்கள் வழங்குவதுண்டு. ஞானத்திலும், சீலத்திலும் வளர்ச்சி பெறாதவர்களுக்கே வயதில் வளர்ச்சியைக்கொண்டு ஏற்றம் இயம்ப வேண்டும். நம் ஸ்ரீ கிருஷ்ணன்ஸ்வாமி சீலத்திலும், ஞானத்திலும் ஒப்புயர்வற்ற வளர்ச்சிபெற்றவராதலால் இவர்க்கு வயதில் வளர்ச்சி அநபேக்ஷிதம். ஆயினும் எம்பெருமானாணையின்படி ஓடுகின்ற காலசக்கரம் ஓடாதிராதே. எம்பெருமானாரைப் போலே நம் ஸ்வாமியும் நூற்றிருபத்தைந்து பிராயம் இந்நிலவுலகை அலங்கரித் தருளியிருந்து அரோக திடகாத்திரராய் விலக்ஷணமான லோகோபகாரங்களைச் செய்துகொண்டு விளங்கவேணும்.

திருப்பாவையில் 'அம்பரமே தண்ணீரே சோறேயறஞ் செய்யும்' என்கிற பாசுரத்தை நிர்வஹிக்கின்ற நம் ஆசாரியர்கள் "அம்பரமும் தண்ணீரும் சோறு மறஞ் செய்யும்" என்றருளிச் செய்யவேண்டியிருக்க, உம்மையை நீக்கி ஏகாரமிட் டதன் கருத்தை விளக்குமிடத்து, நந்தகோபன் ஒவ்வொன்றை தானஞ்செய்யும் போது 'இஃது ஒன்றேயோ இவன் கொடுக்கக் கற்றது!' என்று நினைக்கும்படியா யிருக்குமென்று அருளிச்செய்திருக்கக் காண்கின்றோம். அவ்வண்ணமாகவே நம் கிருஷ்ணன்ஸ்வாமியின் கல்வித் திறமைகளைக் கவனிக்குங்கால் 'இஃது ஒன் றேயோ இவர் கற்றது!' 'இஃது ஒன்றேயோ இவர் பயின்றது!' என்றே யெண்ணலாயிருக்கும். இவர் பலபல கற்றிருந்தாலும் கற்ற கல்வியை இரண்டே யாகக் கொள்ளலாம்—லௌகிகம், வைதிகம் என்று. இவை ஒவ்வொன்றிலும் இவருடைய பரிச்ரமங்களை ஊன்றி நோக்கும்போது நந்தகோபாலனிடத்துப் போலவே வியக்கலாகும். உபய வேதாந்த ரஹஸ்ய நூல்களில் ஸ்வாமியின் உழைப்பு வைதிகர்களுக்கு மில்லையென்னத் தட்டில்லை.

Dr. Sir. முதலான விருதுகளை வேறு சிலரும் பெற்றுவிடலாம், பெற்று மிருக்கிறார்கள். 'பத்மவிபூஷண' இத்யாதிவிருதுகள் விஞ்ஞானப்புலவர்களுக்கே ஏற்றவை. இவற்றைப் பாத்திரமறிந்து இட்டவர்கள் நம் ஸ்வாமியின் கல்வித் திறமையை உள்ளவாறு உணர்ந்திருக்கின்றார்களென்பதுபற்றி உகக்கின்றோம்.

பொலிக! பொலிக!! பொலிக!!!

**வையம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வீர் மண்ணூடே.**

**'பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு.'**

ஸ்ரீ:

# கலியனும் கண்ணனும்.

(ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்)

**திருமங்கையாழ்வார்க்கும் கண்ணபிரானுக்கும் பல படிகளாலே ஒற்றுமை உரைக்கப்படுகிறது.**

श्लो ॥ सूर्यत्वात्सूचितत्वात् अपहृतिकरणात् गोकुलोद्धारकत्वात्
बद्धत्वात् शास्त्रदत्वात् पटुजनसहयोगाच्च लक्ष्मीपतित्वात् ।
नीलत्वात् नीतिमार्गच्युतिमतिभजनात् अन्ततश्चावतारात्
शत्रुध्वंसोद्भटत्वात् कलिरिपुमुनिराट् कृष्णतुल्यो विभाति ॥

సూర్యత్వాత్సూచితత్వా దపహృతికరణాత్ గోకులోద్ధారకత్వాత్
బద్ధత్వాత్ శాస్త్రదత్వాత్ పటుజనసహాయోగాచ్చ లక్ష్మీపతిత్వాత్
నీలత్వాన్నీతిమార్గచ్యుతిమతి భజనాద న్తతశ్చావతారాత్
శత్రుధ్వంసోద్భటత్వాత్క లిరిపుమునిరాట్ కృష్ణతుల్యో విభాతి॥

ஸூர்யத்வாத் ஸூசிதத்வாத் அபஹ்ருதிகரணாத் கோகுலோத்தாரகத்வாத்
பத்தத்வாத் சாஸ்த்ரதத்வாத்படு ஜநஸஹயோகாச்ச லக்ஷ்மீபதித்வாத்.
நீலத்வாத் நீதிமார்க்கச்யுதி மதிபஜநாத் அந்ததச்சாவதாராத்
சத்ருத்வம்ஸோத்படத்வாத் கலிரிபுமுநிராட் க்ருஷ்ணதுல்யோ விபாதி.

இந்தச்லோகத்தினால் கண்ணனுக்கும் கலியனுக்கும் பன்னிரண்டுபடிகளாலே ஸாம்யம் நிர்வஹித்திருக்கின்றோம். இதுதன்னை ஒவ்வொன்றாக வெடுத்து உபபாதிப்போமினி.

[ஸூர்யத்வாத்.] ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் கண்ணபிரானுடைய திருவவதாரத்தைக் கூறுகின்ற பராசரமஹரிஷி கண்ணனவதரித்தானென்று சொல்லவில்லை; *ததோகிலஜகத்பத்மபோதாய அச்யுதபாநுநா, தேவகீபூர்வஸந்த்யாயாம் ஆவிர்ப்பூதம் மஹாத்மநா.* என்கிறச்லோகம் க்ருஷ்ணவதாரத்தைக் கூறுமது. இதில், தேவகியாகிற பூர்வஸந்தியையிலே க்ருஷ்ணஸூரியன் ஆவிர்ப்பவித்தான் என்றது. இதனால் க்ருஷ்ணன் ஸூர்யனென்னுமிடம் ஸித்தித்தது. கலியனும் ஸூர்யனாகவே பேசப்பட்டிருப்பதை *கலயாமி கலித்வம்ஸம் கவிம் லோகதிவாகரம்* என்கிற அவருடைய ஸ்துதிபத்யத்தினால் உணரலாம். ஆக இருவரும் ஸூர்யர்களென்னுமத்தாலே ஸாம்யம்.

[ஸூசிதத்வாத்] ஸூசிப்பிக்கப்பட்டபடியாலே என்பது இதன் பொருள். கண்ணனுடைய அவதாரமும் கலியனுடைய அவதாரமும் இவர்கள் அவதரிப்பதற்கு வெகுநாள் முன்னமே ஸூசிப்பிக்கப்பட்டிருந்தது. எங்ஙனே யென்னில்; கண்ணனுடைய திருத்தாயாரான தேவகிப்பிராட்டி கம்ஸனுக்கு உடன்பிறந்தவள். அக்கம்ஸன் தேவகிக்கு மிகச் சிறப்பாக விவாஹமஹோத்ஸவத்தை நடத்திவைத்துப் பரமப்ரீதியுடன் தம்பதிகளை ரதத்தில் வீற்றிருக்கச் செய்து அதனைத் தானே ஓட்டிக்கொண்டு போகையில் ஆகாசவாணியொன்று செவிப்பட்டது; ‘இத்தேவகியின் எட்டாவது குழந்தையினால் உனக்கு ம்ருத்யு விளையும்’ என்று. அந்த

வாக்கு அப்படியே பலித்தது. இதனால் ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய திருவவதாரம் முன்னமே ஸூசிதமாயிற்றென்பது விளங்கிற்று. இது போலவே திருமங்கையாழ்வாருடைய திருவவதாரமும் முன்னமே ஸூசிதமாகியுள்ளது. திருவாய்மொழியில் (5—2—1) *கலியுங் கெடும் கண்டு கொண்மின்* என்கிற பாசுரத்தை ஆகாசவாணியென்றே கொள்க. தவறாமல் பலிப்பது ஆகாசவாணி. இந்தப் பாசுரமும் தவறாமல் பலித்திருக்கின்றது. ஆசார்யஹ்ருதயத்தில் "கலியுங் கெடும் போலே ஸூசிதம்" என்றவிடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் "இவர் தாம் மயர்வற மதிநலம் பெற்றவராகையாலே *கலியுங்கெடும்* என்று—திருமங்கையாழ்வார் உடையவர்போல்வார் அவதரித்துக் கலியுகஸ்வபாவமும் கழியுமென்று மேல் வரும் அம்சத்தை தர்சித்து அருளிச்செய்தாப்போலே" என்று திருவாய்மலர்ந்தருளியுள்ள திவ்யஸூக்தி இங்கே அநுஸந்தேயம். கண்ணன் கம்ஸவதம் செய்தவன்; இவ்வாழ்வார் கலிபுருஷவதம் செய்தவர்.

[அபஹ்ருதிகரணாத்] கண்ணன் கள்வனென்று ப்ரஸித்திபெற்றதுபோல இவ்வாழ்வாரும் கள்ளரென்று ப்ரஸித்திபெற்றவர். 'வெண்ணெய் களவுசெய்தான், பெண்களைக் களவுசெய்தான்' என்று ஸ்ரீக்ருஷ்ண சரித்திரங்களிலே வாசிக்கிறோம். இவருடைய சரித்திரத்திலும் திருவரங்கம் பெரியகோயிலில் கோபுர ப்ராகார மண்டபாதி நிர்மாணத்திற்காகப் பலபல களவுகள் செய்த செய்திகளை வாசிக்கின்றோம். ஆக இத்தகையகள்வத்திலும் ஸாம்யம்.

[கோகுலோத்தாரகத்வாத்.] *ஆயர்பாடிக்கணிவிளக்கே* என்றும், *ஆயர்குலத்தினில் தோன்று மணிவிளக்கை* என்றும் சொல்லுகிறபடியே கண்ணன் திருவாய்ப்பாடியில் திருவவதரித்துக் கோகுலத்தை உத்தரிப்பித்தமை பிரஸித்தம். இவ்வாழ்வாரும் கோகுலோத்தாரணம் செய்ததுண்டு; எங்ஙனே யென்னில்; *ந்ருபசு:* என்று ஆளவந்தாரும் *வ்ருத்த்யா பசுர் நரவபு:* என்று மணவாள மாமுனிகளும் அருளிச்செய்தபடி நாமெல்லாரும் பசுக்களேயன்றோ. *ஜ்ஞாநேந ஹீந: பசுபிஸ் ஸமாந:* என்றும் ப்ரஸித்தமாகவுள்ளது. ஞானமும் நன்னடத்தையுமொன்று மின்றிக்கே யிருப்பதனால் கோக்களாயிருக்கின்ற நம்முடைய குலத்திலே ஆழ்வார் வந்து அவதரித்து உத்தாரகராயினர்.

[பத்தத்வாத்.] கண்ணன் *மத்துறு கடை வெண்ணெய் களவினிலுரவிடையாப் புண்டு* என்றும் *கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டான்* என்றும் சொல்லுகிறபடியே கட்டுண்டமை ப்ரஸித்தம். இவ்வாழ்வாரும், பகவதாராதனத்திற்காட்டிலும் பரமபாவனமான பாகவதாராதனத்தில் ஊன்றியிருந்தகாலத்தில் தாம் அரசனுக்குச் செலுத்தவேண்டிய பகுதிப்பொருளுமுட்படச் செல்வம் முழுதையும் செலவிட்டுவர. அச்செய்தியைச் சிலர் சொல்லக்கேட்ட கொற்றவன் கோபங்கொண்டு இவரை ஒரு தேவாலயத்தில் சிறைவைக்கச் செய்தனனென்பது இவ்வாழ்வாருடைய சரித்திரத்தில் பிரஸித்தம். ஆக, கட்டுண்டமையினால் இருவர்க்கும் ஸாம்யம்.

[சாஸ்த்ரதத்வாத்.] சேதநர்களுக்கு உஜ்ஜீவநோபாயமான சாஸ்திரத்தைக் கொடுத்ததனாலே என்று பொருள். கண்ணபிரான் *அறிவினால் குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய, நெறியெல்லாமெடுத்துரைத்த நிறைஞானத் தொருமூர்த்தி* என்கிறபடியே ஸகலார்த்தப்ரகாசகமாய் ஸகலசேதநோஜ்ஜீவநஸாதனமான கீதாசாஸ்த்ரத்தையருளிச்செய்தான். திருமங்கையாழ்வாரும் *நெஞ்சுக்கிருள்கடிதீபம் அடங்காநெடும்பிறவி நஞ்சுக்கு நல்லவமுதம், தமிழநன்னூல் துறைகளஞ்சுக்கிலக்கிய மாரணசாரம், பரசமயப்பஞ்சுக்கனலின் பொறி பரகாலன் பனுவல்களே* என்கிறபடியே கீதாசாஸ்த்ரத்திற்காட்டிலும் பரமோத்க்ருஷ்டமான திவ்யப்ரபந்த

மஹாசாஸ்த்ரத்தை யுபகரித்தருளினர். கண்ணன் தந்த சாஸ்திரத்தை 'கீதோபநிஷத்து' என்னுமாபோலே இதையும் "பொங்குபுகழ் மங்கையர்கோனீந்த மறையாயிரம்" என்பர்கள். ஆக, சாஸ்த்ரப்ரதாநத்தாலே இருவர்க்கும் ஸாம்யம் பொருந்தும்.

[7. படுஜநஸஹயோகாத்.] கண்ணபிரான் *தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டுவருவான்* என்கிறபடியே *கொந்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வானோர்மகனை தான் செய்யும் தீமைகளுக்குத் துணைவராகப் பல சதுரர்களை உடன் கொண்டிருந்தான். திருமங்கையாழ்வாரும், நீர்மேல் நடப்பான் நிழலிலொதுங்குவான், தாளூதுவான், தோலாவழக்கன் முதலான சதுரர்களைத் தமது செய்கைகளுக்குத் துணைவராகக் கொண்டிருந்தார்.

[8. லக்ஷ்மீபதித்வாத்.] கண்ணபிரான் ஸாக்ஷாத் நாராயணமூர்த்தியாதலால் லக்ஷ்மீபதியாவன். திருமங்கையாழ்வாரும் லக்ஷ்மீபதியாவர். எங்ஙனே யென்னில்; இவர் வளர்ந்து வருகையில் அந்நாட்டில் அண்ணன்கோயில் என்று வழங்குகின்ற திருவெள்ளக்குள மென்னுந் திருப்பதியில் மிகச் சிறந்ததொரு தாமரைப் பொய்கையில் தேவலோகத்து அப்ஸர ஸ்த்ரீகள் பலர் வந்து ஜலக்ரீடைசெய்து செல்ல, அவர்களுள் திருமாமகளென்பாள் தன் இச்சையால் தெய்வவடிவத்தைவிட்டு மானுடவடிவங்கொண்டு தனியே குமுதமலர் கொய்து நின்றாளாக, அங்கு அநுஷ்டாநத்திற்காக வந்த ஒரு வைஷ்ணவ வைத்யன் அவளைக் கண்டு செய்தி விசாரிக்க, அவள் 'என்னோடு கூடவந்த மாதர்கள் என்னைவிட்டுப் போய்விட்டார்கள், தனியிருந்து அலைகின்ற என்னை நீர் பாதுகாத்தருளவேணும்' என்று வேண்டிக்கொள்ள, மலடனை அம்மருத்துவன் மகிழ்ச்சியோடு அதற்கு உடன்பட்டு அம்மகளைத் தன் மாளிகைக்கு அழைத்துப்போய் மனையாள் வசம் ஒப்பித்து, குமுதமலர் கொண்டு நின்றது காரணமாகக் குமுதவல்லியென்று அப்பெண்ணுக்கு நாமமிட்டு வளர்த்து வருகையில் அக்கன்னிகைக்கு விவாஹத்துக்குரிய பிராயம் வந்தவளவிலே அவளை வளர்க்கிற அந்த வைத்தியனுக்கு 'மஹா குணவதியான இப் பெண்ணுக்கு ஏற்ற கணவன் உலகத்திலுளனோ' என்ற கவலையுண்டாக, அப்பொழுது அவளுடைய ரூபலாவண்ய ஸௌந்தரியங்களையும் குணாதிசயங்களையும் சாரர்கள் திருமங்கை மன்னனிடம் கொண்டாடிக் கூற, உடனே அவர் அங்கு வந்து அந்த வைத்தியனிருக்கும் வீட்டிலே புக்கு அவனோடு ஸம்பாஷணை செய்து அப்பெண்ணின் வரலாற்றை வினவி அதைத் தந்தையார்வாயில் அறிந்த வளவில் 'இவளை எனக்குத் தாரைவார்த்துக் கொடுக்கவேணும்' என்று அவரை வணங்கிக்கேட்டார். அப்போது குமுதவல்லி குறுக்கிட்டு "திருவிலச்சினை திருமண்காப்பு முதலிய பஞ்ச ஸம்ஸ்காரமுடைய ஒரு ஸ்ரீவைஷ்ணவர்க்கேயன்றிப் பிறர்க்கு வாழ்க்கைப்படமாட்டேன்" என்று தன் உறுதியைத் தெரிவித்தாள். அதுகேட்ட திருமங்கை மன்னன் உடன் திருநறையூர்க்குச் சென்று அங்கு எழுந்தருளியுள்ள நம்பி என்னு மெம்பெருமானுடைய திருமுன்பே நின்று பிரார்த்தித்து அப்பிரானிடத்தில் திருவிலச்சினை பெற்றுப் பன்னிரண்டு திருமண் காப்புகளும் சாத்திக் கொண்டு விவாஹார்த்தமாக விரைவில் வந்துசேரக் கண்டு மீண்டும் குமுதவல்லி "நீர் ஓராண்டளவும் நித்தியமாக ஆயிரத்தெட்டு ஸ்ரீவைஷ்ணவர்களை அமுதுசெய்வித்து அவர்களுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தையும் போனகஞ் செய்த சேஷத்தையும் உட்கொண்டாலன்றி உம்மை நான் பாணிக்கிரஹணஞ் செய்து கொள்ளமாட்டேன்" என்ன, அவளிடத்தில் கொண்ட ஆசையின் கனத்தால் அவர் இவ்வரிய விரதத்தைச்செய்து முடிப்பதற்கும் உடன்பட்டு அங்ஙனமே செய்வதாகச் சபதஞ் செய்து கொடுக்க, அதன்பின் இருவர்க்கும் திருமணம் நடைபெற்றது. லக்ஷ்மீபதித்வமானது பகவானுக்கு அஸாதாரணமாயிருந்தாலும் லக்ஷ்மியின் பெயரைத் தரித்திருந்த குமுதவல்லித்தாயாருக்குப் பதியென்னுங் காரணத்தினால் ஆழ்வாரும் லக்ஷ்மீபதியாயினர். ஸ்ரீவைஷ்ணவலக்ஷ்மிக்குப் பதியென்றுங் கொள்ளலாம்.

[9. நீலத்வாத்.] கண்ணபிரான் *கண்ணனென்னுங் கருந்தெய்வம்* என்றும் *கானகமெல்லாந் திரிந்து உன் கரிய திருமேனிவாட* என்றும் சொல்லுகிறபடியே நீலநிறத்தழகார்ந்தவன். திருமங்கையாழ்வாரோவென்னில் நீலனென்னுந் திருநாம முடையவர். இராமாநுச நூற்றந்தாதியில் "தண்டமிழ் செய்த நீலன் தனக்கு" என்னுமிடத்தில் நீலனென்ற சொல்லால் திருமங்கையாழ்வாரே விவக்ஷித ரென்பதறிக. குருபரம்பராப்ரபாவத்திலு முள்ளதேயிது,

[10. நீதிமார்க்கச்யுதிமதிபஜநாத்.] கண்ணபிரானுடைய சரித்திரங்களை நோக்கு மிடத்து *மச்சொடுமாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி நிச்சலுந் தீமைகள் செய்வாய்* என்றும், *பிறர் மக்களைமையன்மை செய்து தோளாலிட்டவரோடு திளைத்து நீ சொல்லப்படாதன செய்தாய்* என்றுமுள்ள பாசுரங்களின்படி கொடிய கடிய சேஷ்டிதங்களைச்செய்த விவன் நீதிநெறியில் நின்றும் நழுவினவனல்லவா? என்று நினைப்பதற்கு இலக்கா யிருப்பன் கண்ணபிரான். திருமங்கையாழ்வாரும் அப்படியேயன்றோ. இத் தன்மையினால் ஒரு ஸாம்யம். நீதி நெறியில் நழுவினதாக நினைக்கலாமத்தனை யன்றி உண்மையில் இருவரும் நீதிநெறிவழுவாதவர்களே. நமது ச்லோகத்தில் "நீதிமார்க்கச்யுதிமதிபஜநாத்" என்றது 'ச்யுதிமதிவிஷயத்வாத்' என்றபடி. கண்ணபிரானுடைய நீதிநெறிவழுவாமையை வேதாந்த தேசிகன் யாதவாப்யுத யத்தில் (4–64.) *விமோஹநே வல்லவகேஹிநீநாம் நப்ரஹ்மசர்யம் பிபிதே ததீயம், ஸம்பத்ஸ்யதே பாலகஜீவநம் தத் ஸத்யேந யேநைவ ஸதாம் ஸமக்ஷம்.* என்னும் ச்லோகத்தினால் தெளிவித்தார். அதாவது, பாரதப்போரில் அச்வத்தாமா பிரயோ கித்த அபாண்டவாஸ்த்ரத்தினால் உத்தரையின் கருப்பிண்டம் கரிக்கட்டையாக, அப்போது கண்ணபிரான் "யதி மே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத் ஸத்யஞ்ச மயி திஷ்டதி, அவ்யாஹதம் மமைச்வர்யம் தேந ஜீவது பாலக:" [நான் ப்ரஹ்ம சர்யமும் ஸத்யமும் வழுவாதவனாயிருந்தேனாகில் இது உயிர்பெற்றெழுக.] என்று பலருமறிய ப்ரதிஜ்ஞை செய்து நிறைவேற்றப்பெற்ற கதையினால் கண்ணன் நீதிநெறிவழுவாதவனென்பது விளங்கிற்று. திருமங்கையாழ்வார் நீதிநெறிவழு வாதவரென்பதை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் *ஜிதபாஹ்யஜிநாதி மணிப்ர திமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டபவப்ரகணாந் விததே பரகாலகவி: ப்ரணமேமஹி தாந்* என்னும் ச்லோகரத்நத்தினால் வெளியிட்டருளினர்.

[11. அந்தநச்ச அவதாராத்.] பகவானது விபவாவதாரங்களில் க்ருஷ்ணாவ தாரமே முடிவானது. கல்கியவதாரம் பவிஷ்யத்தென்கிறார்கள். அது வந்தபோது பார்த்துக்கொள்வோம். இதுகாறும்முடிந்துள்ள அவதாரம் க்ருஷ்ணாவதாரமே. திரு மங்கையாழ்வாரும் ஆழ்வார்களுக்குள் கடைப்பட்டவர். *பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசையையனருள்மாறன் சேரலர்கோன், துய்யபட்டநாதன் அன்பர்தாள்தூளி நற்பாணன் நன்கலியன், ஈதிவர்தோற்றத்து அடைவாமிங்கு* என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரமுங்காண்க. ஆக இருவரும் சரமாவதார பூதர் என்பதனால் ஸாம்யம் பெற்றனர்.

[12. சத்ருத்வம்ஸோத்படத்வாத்.] கண்ணபிரான் *தேனுகன் பிலம்பன் காளியனென்னும் தீப்பப்பூடுகளடங்கவுழக்கி*என்றும்*மலைபுரைதோள் மன்ன வரும் மாரதரும் மற்றும் பலர் குலைய, நூற்றுவரும் பட்டழிய* என்றும் சொல்லுகிறபடியே பகைவர்களையெல்லாம் வேரோடு களைந்தொழிப்பதில் பேர் பெற்றவன். ஆழ்வாரும் *அருள்மாரி அரட்டமுக்கி அடையார் சீயம்* என்றும் *ஒன்றலர் தங்களை வெல்லு மாடல்மாவலவன் கலிகன்றி* என்றும் தாமே யருளிச் செய்தபடியே புறமதத்தவர்களாகிற பகைவர்களைக் களைந்தொழித்து இதனாலேயே பரகாலனென்று பேர்பெற்றவர். ஆக இப்பன்னிரண்டு படிகளாலே கண்ண னுக்கும் கலியனுக்கும் ஒற்றுமை நிர்வஹிக்கப்பட்டதாயிற்று. ... ... *

# ஸ்வாபதேச பரமார்த்தம்.

ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம். அண்ணங்கராசாரியர்.

நிகழும் மார்கழித் திங்களில் எங்கும் திருப்பாவை யநுபவம் திகழ்கின்றது. இவ்வநுபவம் பல முகமாகவும் நிகழ்கின்றது. ஸன்னிதிகளிலும் மடங்களிலும் திருமாளிகைகளிலும் திருப்பாவைமூலம் ஸேவித்துச் சாத்துமுறை செய்து கோஷ்டீ பரிபாலனம் பண்ணுவது ஒரு க்ரமம். சிஷ்யப்ரார்த்தனையினால் திருப்பாவையின் பூர்வாசார்யவியாக்கியானங்களை ஸ்ரீ கோசபூர்வகமாக ப்ரவசனம்செய்வது மற்றொரு க்ரமம். உபந்யாஸ ரூபமாகத் திருப்பாவையின் பொருள்களை யெடுத்துரைப்பதும் ஒரு க்ரமம். சென்னை மாநகரின் பலவிடங்களிலும் இந்த க்ரமம் பெரும்பாலும் நடைபெற்று வருகின்றது. இது பரமானந்தஸந்தோஹபீஜம்.

திருப்பாவையின் பொருளை உபந்யஸிப்பதென்றால் அதிலுள்ள விசேஷார்த்தங்களையும் ஸ்வாபதேசார்த்தங்களையும் விவரிப்பதேயாகும். திருப்பாவைக்கு ஜீவநாடியாயிருப்பது ஸ்வாபதேசார்த்தமே. இது தமிழில் உள்ளுறை பொருள் என்றும், ஸம்ஸ்க்ருதத்தில் த்வந்யர்த்தம் (அல்லது) வ்யங்க்யார்த்த மென்றும் வழங்கப்பெறும். இவ்வர்த்தம் எங்ஙனே யிருக்குமென்பதை நம்முடைய உபந்யாஸ கோஷ்டிகளில் அந்வயிக்குமவர்களும், வடமொழி தென்மொழிகளில் நாமெழுதி வெளியிட்டுள்ள வியாக்கியானங்களை யநுபவிக்குமவர்களும் நன்கு உணர்வர்கள். இப்போது இத்துடன் சேர்த்து வெளியிடப்படுகின்ற **கோதைதமிழ்ச்சுவையமுதம்** என்கிற வியாஸம் இந்த முறையைச் சுருக்கமாகத் தெரிவிப்பதாகும். பெரும்பாலும் ஸ்வாபதேசார்த்த விவரணரூபமாகவே அந்த வியாஸம் அமைக்கப் பட்டுள்ளது. அது மிகவும் ஸம்க்ஷிப்தம். நம்முடைய விஸ்த்ருத வியாக்கியானங்களைக் கொண்டு விரிவாகத் தெரிந்துகொண்டு களிப்பவர்கள் பலருளர்.

இவ்விஷயத்தில் சிலர் இரண்டுவகையாகப் பேசிவருவது நமது காதில் விழுகிறது.

(1) ஸ்வாபதேசார்த்தமென்று ஒருபொருளை யதேஷ்டமாக ஏறிட்டுச் சொல்லுவது மிகவும் வீணானது. இப்பொருளை திவ்யப்ரபந்தகர்த்தாக்கள் நெஞ்சாலும் நினைத்ததில்லை; வியாக்கியான கர்த்தாக்கள் எழுதிவைத்ததுமில்லை. ஆகவே ஸ்வாபதே சார்த்தமென்று ஒன்றைச் சொல்லிப் போது போக்குவது பழுதே.

(2) முக்கியமாகஸ்வாபதேசமென்கிற ஸம்ஸ்க்ருதசப்தம் ஒருநிகண்டுவிலும் காண்பதன்று. இது ஸாதுவானசப்தமேயன்று. அந்யாபதேச மென்கிற சொல் பொருந்தினாலும் ஸ்வாபதேசமென்கிற சொல் பொருந்தவே மாட்டாது. இந்த பதத்திற்குப் பொருளென்ன? என்று கேட்டால் ஸமஞ்ஜஸமாக ஒரு பொருளும் சாஸ்த்ரஜ்ஞர்களால் சொல்லப்போகாது. இது அர்த்தமில்லாத பதம்.

ஆக இங்ஙனே இருவகையான பேச்சுக்களைச் சிலர் பேசிவருவதாகத் தெரியவருகிறது. இப்படி பேசுமவர்கள் ஸாமான்யரல்லரென்றும் அவர்களும் திருப்பாவை ப்ரவசநம் செய்துபோருகிறவர்களே யென்றும் மஹாபண்டிதர்களென்றும் சொல்லுகிறார்கள். ஸ்வாபதேசார்த்தத்தைக் கண்டறிந்து சொல்ல சக்தியற்றவர்கள் இங்ஙனமேதான் சொல்லி உய்யவேணுமாதலால் அவர்கள் இப்படிச் சொல்லுவதில் வியப்பில்லை. இதைப்பற்றின பரமார்த்தம் வெளிவர வேணுமென்றுகருதிய ஸர்வேச்வரனே அவர்களைக்கொண்டு இங்ஙனம் சொல்லுவித்தான்—சொல்லுவிக்கிறான் என்பது நமது துணிபு. ஸ்வாபதேச மென்கிற சப்தப்ரயோகமே அஸாதுவென்கிற வார்த்தைக்கு முன்னம் விடையிறுத்து, அதன் பிறகு மற்றொருவார்த்தைக்கும் விடையிறுக்கிறோம். சென்னைக் காருமானி கலாசாலைத் தலைமைப் பண்டிதரான ஸ்ரீ உ.வே. ஜி. பக்ஷிராஜய்யங்கார் ஸ்வாமியைக் கேட்டால் இங்குப் பூர்வபக்ஷி இன்னாரென்று தெரியும்.

# ஸ்வாபதேசபத ஸௌஷ்டவ நிரூபணம்.

ஸ்வாபதேசமென்கிற ஸம்ஜ்ஞை ஸம்ஸ்க்ருத சாஸ்த்ர ஸரணியின்படி பொருந்தாதென்பவர்களின் அபிப்ராயம் யாதெனில்; அபதேசமென்கிற சொல்லானது வ்யாஜமாகக் கைக்கொள்ளப்பட்ட அமுக்கியத்தைக் குறிப்பதாகும். இது (அந்ய) என்கிற சொல்லோடு சேர்ந்து அந்யாபதேசம் என்று ஆகலாம். அமுக்கிய மான வேறு பொருளைக் குறிப்பதென்று அச்சொல்லுக்குப் பொருள் சொல்லப் பொருத்தமுண்டு. அபதேசமென்கிற சொல்லானது (ஸ்வ) என்கிற பதத்தோடு எங்ஙனே சேரும்? சேர்ந்தால் என்ன பொருள் கிடைக்கும்? அந்யமான பொருள் அமுக்க்யமாயிருக்கத் தகுதியுண்டு. ஸ்வம்மான பொருள் அமுக்க்யமாயிருக்கத் தகுதி யில்லையே. வேறொன்றை வியாஜமாக்கிச் சொல்லுவது அந்யாபதேசம். இந்த ரீதியில் ஸ்வாபதேசமென்பதற்கு 'தன்னையே வியாஜமாக்கிச் சொல்லுதல்' என்றல்லவோ பொருளாகும். இது ஸம்பாவிதமன்றே. ஆகவே இச்சொல் அஸங் கதம்—என்பது ஆக்ஷேபகர்களின் வாதமாகும்.

இனி இந்த ஆக்ஷேபத்தை நிரஸிக்கும்வழி காட்டுகிறோம். வடமொழியில் வ்யபதேச மென்றொரு சொல் ப்ரஸித்தம். அதற்கு என்ன பொருளோ அதுவே தான் அபதேச மென்பதற்கும் பொருள். வி என்கிற உபஸர்க்கம் சேர்ந்தாலும் சேராவிடினும் பொருள் ஒன்றே. வ்யபேக்ஷா, அபேக்ஷா என்கிற சொற்களை இங்கு நிதர்சனமாகக் கொள்வது. ஸாபேக்ஷ:, நிரபேக்ஷ: என்கிற பதங்களின் ஸ்தானத்திலேயே 'ஸவ்யபேக்ஷ:, நிர்வ்யபேக்ஷ:' என்கிற பதப்ரயோகங்களையும் ப்ரஸித்தமாகக் காண்கிறோம். "ஸ்வக்ரியாஸாதநவ்யக்ரோ நாலமந்யத் வ்ய பேக்ஷிதும்" என்பது தண்டியின் காரிகை. இங்கு "நாலமந்யதபேக்ஷிதும்" என்றாலும் ச்லோகம் கூடும். பொருளிலும் குறையில்லை. ஆயினும் வி என்னு முபஸர்க்கத்தைச் சேர்த்து ப்ரயோகிக்கப்பட்டது. அது சேர்ந்தாலும் சேரா விட்டாலும் பொருள் ஒன்றே. இங்ஙனே காட்டக்கூடிய நிதர்சநங்கள் ஒன்றல்ல, இரண்டல்ல; பலபலவுள்ளன. அபகம: வ்யபகம:; அபாய: வ்யபாய:........... என்றிங்ஙனே கண்டுகொள்வது. இவ்வண்ணமாகவே வ்யபதேசமென்பதும் அபதேசமென்பதும் பர்யாயமாக வழங்கும். வ்யபதேசமென்பதற்கு 'குறித்தல்' என்று பொருள். அபதேசமென்பதற்கும் அதுவே பொருள். முக்கியமாக உத் தேசிக்கப்பட்ட பொருளைக்காட்டிலும் வேறான வொரு பொருளைக் குறிப்பது அந்யாபதேசம்; உண்மையில் விவக்ஷிதமான பொருளையே குறிப்பது ஸ்வாப தேசம். அந்யஸ்ய அபதேச: அந்யாபதேச:; ஸ்வஸ்யைவ அபதேச:- ஸ்வாப தேச:. ஸ்வம் அபதிச்யதே அஸ்மிந்நிதி ஸ்வாபதேச:; அந்யத் அபதிச்யதே அஸ் மிந்நிதி அந்யாபதேச: என்னவுமாம். ஒரு பதத்திற்கு எத்தனை பொருள்களுண்டு, எத்தனை பொருள்களில் பிரயோகமுண்டு என்பதை ஆழ்ந்த அறிவுடையார் ஆராய வல்லவர். அபதேச பதத்திற்கு இன்னது அர்த்தம் என்பதைக் கீழே விவரித் தோம். ஸுப்ரஸித்தமான நாமலிங்காநுசாஸநமென்கிற அமரகோசத்தில் மூன் றாவது காண்டத்தில் நாநார்த்த வர்க்கத்தில் "பதே லக்ஷ்யே நிமித்தே அபதேசஸ் ஸ்யாத்" என்றுள்ளது. *அபதேச: புமாந் லக்ஷ்யே நிமித்தவ்யாஜயோரபி* என்பது விச்வகோசம். இப்படியே பலபல கோசங்கள் கிடைக்கும். லக்ஷ்ய மென்கிற முதற்பொருளைவிட்டு வேறு பொருளைப்பற்றிக்கொண்டு ஆக்ஷேபம் செய்வது ப்ராஜ்ஞக்ருத்யமன்று. அந்யார்த்தத்தை லக்ஷ்யமாகக் கொண்டது அந்யாபதேசம்; ஸ்வம்மான அர்த்தத்தை லக்ஷ்யமாகக்கொண்டது ஸ்வாபதேசம் என்றும் எளிதாகத் தெளிய வழியிருக்க, விபரீதவழிகளிற்புகுந்து க்ஷேபிப்பதே!

நன்னூலில் "எப்பொருள் எச்சொலின் எவ்வாறுயர்ந்தோர், செப்பின ரப்படி செப்புதல் மரபே" என்பது ஒரு சூத்திரம். ஒரு பொருளில் பெரியோர் கள் ஒரு சொல்லைவழங்கிவந்தால் கீழுள்ளவர்கள் அதையே ஆதரித்துப் பேச வேண்டுமென்பது இதன் தாற்பரியம். ஸ்வாபதேச அந்யாபதேச பதங்கள் இன்று

நாம் புதிதாகப் படைத்தவையல்ல. நம் ஸம்ப்ரதாய க்ரந்தமாக அவதரித்துள்ள ப்ராசீநாசார்ய மணிப்ரவாள நூல்களில் மிகமிக இடம் பெற்றவை இச்சொற்கள். இவற்றுக்கு ஒருவிதமான உபபத்தியும் இல்லாமற்போனாலுங்கூட 'ஸாங்கேதிக சப்தங்களிவை' என்றுகொண்டு உகந்திருக்கக் கடமையுண்டு. வஸ்துஸ்திதியில் உபபத்திக்கு ஒரு குறையுமில்லையாயிருக்க இதில் குசோத்யம் செய்வது தவறு.

நமது ஸம்ப்ரதாயத்தில் புருஷகாரமென்கிற சொல் வழங்கிவருகின்றது. இச்சொல் மணிப்ரவாள நூல்களில்மட்டு மன்றிக்கே பூர்வாசார்யாநுக்ருஹீத ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களிலும் ஆதரிக்கப்பட்டுள்ளது. இது ஸம்ஸ்க்ருத நிகண்டுகளில் எதிலும் காணக்கிடைக்காது. *லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:* இத்யாதி பகவச்சாஸ்த்ரவசனங்களில் மலிந்துள்ளது. இச்சொல் எப்படி நிஷ்பந்நமாகிறதென்று வேதாந்த தேசிகன் விமர்சிக்கப்புகுந்து என்ன ஸமாதானம் எழுதியிருக்கிறாரென்பதை நோக்கவேணும். இது தர்மபரமான சொல்லா? தர்மிபரமான சொல்லா? என்றும் விமர்சிக்கவேணும். இவ்விசாரங்களை தேசிகனே செய்தருளி, ஸம்ப்ரதாய முறைமையில் வழங்கிவருமிச் சொல்லில் நமக்கென்ன விசிகித்ஸை என்று முடித்து நின்றார். ஸ்வாபதேசாந்யாபதேச பதங்கள் புருஷகார சப்தம்போலே கைகூப்பி நிற்கவேண்டியவையல்ல. சாஸ்த்ரீயமான உபபத்தி பொருந்தியவை - என்பது புநருக்தம். ஆக இவ்வளவும் ஸ்வாபதேசார்த்தமென்கிற சப்தப்ரயோகமே அஸாது என்றவர்களது கலக்கத்தை அகற்றினோம்.

## 2. ஸ்வாபதேசார்த்த ஆவச்யகதா.

இனி, திவ்யஸூக்திகளில் ஸ்பஷ்டமாகக் கிடைக்கிற வாச்யார்த்தங்களென்னப்படுகிற பொருள்களுக்கு மேற்பட ஸ்வாபதேசார்த்தமென்று ஒன்று கொள்ள வேண்டிய ஆவச்யகதையே கிடையாதென்கிற வாதத்தை விலக்குவோம். மிகச் சிறந்த வொரு பொருளைத் தெரிவிக்கக் கருதுமவர்கள் அப்பொருளைச் செவ்வனே வெளிக்காட்டாமல் அதற்குப் போலியான வொரு ஸாமான்யப் பொருளைக் காட்டும்படியான சொற்களைப்பெய்து கவியியற்றுவதென்கிற முறை ஸம்ஸ்க்ருதபாஷையில் உயரிய நூல்களில் காணக்கிடைக்கும். அணியிலக்கணத்தில் [அதாவது அலங்கார சாஸ்த்ரத்தில்] ஆழ்ந்தவர்களின் வாக்குக்களில் பெரும்பாலும் இந்த முறை காணநேரும். இது மனத்திற் படிவதற்காக இரண்டொருசுலோகங்களை உதாஹரணமாகக் காட்டுவோமிங்கு.

" ஆபத்தக்ருத்ரிமஸடாஜடிலாம்ஸ பித்தி: ஆரோபிதோ ம்ருகபதே: பதவீம் யதி ச்வா,
மத்தேப கும்பதட பாடநலம்படஸ்ய நாதம் கரிஷ்யதி கதம் நகராயுதஸ்ய ?".

என்கிறவொரு ச்லோகம் பண்டிதர்கட்கு ப்ரஸித்தமாகத் தெரியும். இதன் பொருள் - ஒரு நாய்க்கு சிங்கத்தின் வேஷத்தையிட்டு அதைச் சிங்கம்போலவே தோன்றும்படி செய்துவிட்டாலும் மதயானைகளின் கும்பஸ்தலங்களைப் பீறிப் பிளிறவல்ல சிங்கத்தின் முழக்கத்தை அந்த நாய் செய்யமுடியுமோ! என்பதாம். மேற்குறித்த ச்லோகத்திலுள்ள சொற்போக்கில் கிடைக்கும் பொருள் இதுவே. ஆனால் இந்தப்பொருளை விவக்ஷித்து இந்த ச்லோகம் கவியினால் இயற்றப்படவில்லை. ஒரு மஹாராஜ ஸந்நிதானத்தில் நான்கு சாஸ்த்ரங்களிலும் புலவனான வொரு மஹாவித்வான் ஆஸ்தான பண்டிதனாக அமர்த்தப்பட்டிருந்தான்; ஏதோ சிறு காரணத்தினால் அந்த மஹாவித்வானை அந்த ஸ்தானத்தில் நின்றும் விலக்கி அல்பஜ்ஞனான வேறொரு பண்டிதனை தோடா சால்வை முதலிய அணிகலன்களினால் அலங்கரித்து அந்த ஸ்தானத்தில் அமர்த்தினார்கள். அப்போது விலகின மஹாவித்வான் அரசனுக்கு விடுத்த ச்லோகமிது. அல்லது ஒருமத்யஸ்தன் விடுத்த

ச்லோகம். ஒன்றுந் தெரியாத ஒருவனுக்குப் பண்டித வேஷத்தைப்போட்டு ஸிம்ஹாஸநத்தில் உட்காரவைத்து விட்டால் வித்வான்கள் வாக்யார்த்தம் செய்ய வரும்போது வாயைத்திறக்க வழியுண்டோ? என்கிறவிதனை உள்ளுறை பொருளாகவைத்து இதற்குப் போலியான வேறொரு பொருளைக் காட்டவல்லசொற்களையிட்டுக்கூறியது இந்த ச்லோகமென்று குவலயானந்தத்தில் காட்டப்பட்டுள்ளது.

அவ்வளவு தூரம் போகவும் வேண்டா; திருப்பாவை இன்னதென்பதே தெரியாமலும், திருப்பாவையில் நாபியினூறின த்வேஷங்கொண்டுமிருப்பவர்களைத் திருப்பாவை ப்ரவசனம் செய்யும்படி சிலர் நியமித்துவிட்டால் அவர்களும் ஏதோ லோபத்தாலே தமக்கும் திருப்பாவையில் அந்வயமுள்ளதுபோல் பாவனை செய்து *நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தமென்று தொடங்கிவிட்டாலும் பாசுரம் வாயில் வாராதே; ஒரு பொருளும் வெளிவராதே. பூர்வாசார்யதூஷணம்தவிர வேறு எதுவும் வெளிப்படாதே. அப்படிப்பட்டவர்களும் இந்த ச்லோகத்தின் ஸ்வாபதேசார்த்தத்திற்கு லக்ஷ்யபூதர்களாகக் குறையில்லையே. *பச்ய நீலோத்பலத்வந்த்வாத் நிஸ்ஸரந்தி சிதாச் சரா:-* ஏக: க்ருதீ சகுந்தேஷு யோங்யம் சக்ராந் நயாசதே* என்றிப்படிப்பட்ட பலபல சுலோகங்கள் அலங்கார நூல்களில் அபரிமிதமாகக் காணக்கிடைக்கும். இவற்றில் ஸ்தூலத்ருஷ்டியில் தோன்றும் பொருள் அந்யாபதேசம்; ஸூக்ஷ்மத்ருஷ்டியில்தோன்றும் பொருள் ஸ்வாபதேசம்.

கவிகளின் நூல்களில் இந்த முறையிருந்தாலும் பரமபக்தர்களான ஆழ்வார்கள் பக்தி பரீவாஹமாகப் பாடியருளின பாசுரங்களிலும் இந்த முறையைக் கொள்ளவேண்டிய அவசியம் யாது? என்று சிலர் கேட்பதுண்டு. ஆழ்வார்களின் திவ்யஸூக்திகளிற் காணும் முறை இப்படிப்பட்டதன்று, இதிற் காட்டிலும் மிக விலக்ஷணமானது. அதைச் செவ்வனே தெரிந்துகொண்டவர்கள் மிகச் சிலரே. "ஸ்வபாதேசமென்றும் அந்யாபதேசமென்றும் பிற்காலத்தவர்கள் ஏதோ ஏறிட்டுப் பேசியுமெழுதியும் போருகிறார்களே யல்லது இந்தவாசியை ஆழ்வார்கள் திருவுள்ளம் பற்றவேயில்லையென்றும், சொற்போக்கில் எப்பொருள் கிடைக்கின்றதோ அப்பொருள்மாத்திரமே ஆழ்வார்களுக்கு விவக்ஷிதம்" என்றும் கூறுகின்றவர்களின் வாதம் அருளிச்செயல்களை ஆழ்ந்து நோக்காமையினாலாயதே. இம்முறை ஆழ்வார்கள் திருவுள்ளம்பற்றியதே யென்பதை அசைக்க முடியாதபடி சிறிது நிரூபிக்கிறோமிங்கு.

எம்பெருமானை நோக்கித் தூதுவிடுவதென்பது திவ்யப்ரபந்தங்களில் நம்மாழ்வார் ஆண்டாள் திருமங்கையாழ்வார் இவர்களது பாசுரங்களிலுள்ளது. பறவைகளையும் மேகங்களையும் தூதுவிடுவதாக ஸ்பஷ்டமான சொல்வடிவம் காண்கிறது. உண்மையில் அஃறிணைப் பொருள்களான விவற்றையே தூது விடுகிறபடியா? அல்லது வேறு உத்தேச்யமா? என்று ஆராய்வோம். காளிதாஸ மஹாகவி மேகஸந்தேசமென்றொரு காவியமியற்றி அதில் ஒரு யக்ஷன் தன் மனைவிபாடே மேகத்தைத் தூதுபோக இரப்பதாக அமைத்துள்ளார். இது ஸம்பாவிதமோ என்கிற சங்கையைத் தாமே கிளப்பிக்கொண்டு அதற்கு ஸமாதானமும் தாமே கூறியுள்ளார். அதாவது, *தூமஜ்யோதிஸ் ஸலில மருதாம்* இத்யாதியான ச்லோகம் அதில் ப்ரஸித்தம். கரசரணாதி யுறுப்புகளில்லாத மேகத்தைத் தூது விடுகிறானே, இதனால் இவனுக்கு ஸமீஹிதமான காரியம் ஸித்திக்க வழியில்லையே என்கிற சங்கையும், ஆமாம் இவனுடைய இஷ்டம் பலிக்க வழியில்லைதான், காமாந்தனைகையாலே விவேகமற்றுக் கண்ணில் கண்டதொரு அசேதநப் பொருளைத் தூதுவிடுகிறான், இந்த அவிவேகத்திற்கு நாமென்ன செய்வது! என்கிற ஸமாதானமும் இந்த ச்லோகத்திலமைந்துள்ளது. இதனால், மேகமேதான் தூதுவிடப்படுகிறது என்றும், அது அசேதந வஸ்துதான் என்றும் அறுதியிடப்பட்டதா

யிற்று. இதிலிருந்து தேறியதென்ன? காளிதாஸர் தம்முடைய கவிதா சாதுர்யத்தைக் காட்டுதற்காகவே காமுகனுடைய கதையொன்றை யமைத்து இந்த ஸந்தேச காவியத்தை இயற்றினர் என்பதே.

ஆழ்வார்களின் தூதுவிடுகை இத்தகைத்தன்று. பறவைகளையும் மேகங்களையும் விளித்துத் தூதுவிடுவதாகச் சொல்வடிவம் கண்டாலும் மஹாஜ்ஞாதாக்களான ஆசாரியர்களையும் அந்தேவாஸிகளையும் ஸப்ரஹ்மசாரிகளையும் தூதுவிடுவதாகவே உண்மையென்பதை ஸ்ரீமந்நாதமுனிகள் தொடக்கமான நம் பூருவாசாரியர்கள் மூதலிக்கிறார்கள். இதை வேதாந்ததேசிகரும் த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளியில் * தேசிகாஸ் தத்ர தூதா:* என்பதனல் காட்டியருளினர். அது, ஆசார்ய ஹ்ருதயம் ஸேவித்ததனுலாய தென்பதில் ஸந்தேஹம் வேண்டா.

ஆசாரியர்கள் காட்டுவது கிடக்கட்டும்; ஆழ்வார்களுக்கும் இதுவே ஸம்மதமென்பதை நிரூபிக்கிறோம். முதன் முதலாக நம்மாழ்வாரே திருவிருத்தத்தில் தூதுவிட்டவர். அதில் * வீசுஞ் சிறகால்பறத்தீர்......எம்மீசர் விண்ணோர் பிரானார் மாசில் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே! என்று கூறி வண்டுகளை விளிக்கின்றார். எம்பெருமானுடைய திருவடிவாரத்திலே எம்மைச் சேர்விக்கின்ற—என்றிட்ட விசேஷணமானது நாம் கண்ணுற்காணும் வண்டுகட்குச் சிறிதேனும் பொருந்துமாவென்று பாருங்கள். * மயர்வற மதிநல மருளப்பெற்று மஹாஜ்ஞாதாவாக விளங்காநின்ற ஆழ்வார் காடுகளில் பூஞ்செடிகளிலுழல்கின்ற வண்டுகளைக் குறித்து இந்த விசேஷணமிட்டிருக்க ப்ரஸக்தி யுண்டாவென்று விவேகிகள் விமர்சிக்கவேணும். * வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம்பணிந்து * என்று இவர்தாமே திருவாய்மொழியி லருளிச் செய்திருக்கிறபடி வேதம்வல்ல மஹான்களன்றோ பகவத்பாதாரவிந்த ப்ராபகர்கள். அன்னவர்களைத்தான் வண்டுகளே! யென்று விளிக்கின்றேனென்று ஆழ்வார்தாமே நன்கு காட்டி யருளினரன்றோ. இல்லையேல் "மலரடிக்கீழ் எம்மைச்சேர்விக்கும் வண்டுகளே!" என்ன ப்ரஸக்தியில்லையே. பரிகராலங்காரலக்ஷணத்தை இங்கு நினைக்க.

இதற்கடுத்த பாசுரத்திலும் "வண்டுகளோ வம்மின், நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ வுண்டுகளித்துழல்வீர்க்கு" என்கிறார். நீர்ப்பூக்களான தாமரை முதலியவற்றிலும் நிலப்பூக்களான மல்லிகை முதலியவற்றிலும் மரப்பூக்களான வகுளம் முதலியவற்றிலும் படிந்து உண்டு களிக்கின்றவை இவ்வண்டுகள் என்பதா ஆழ்வார்க்கு விவக்ஷிதம். நீர்ப்பூவான க்ஷீராப்திநாதனுடையவும் நிலப்பூவான ராமக்ருஷ்ணுதி விபவாவதார - அர்ச்சாவதார - எம்பெருமான்களுடையவும், மரத்திலொண்பூவான * சேணுயர் வானத்திருக்கும் தேவபிரானுடையவும் குணனுபவங்களைப் பண்ணிக் களிக்கின்ற பரமபாகவதர்களையன்றோ ஆழ்வார் பேசினர்.

* மாறன் பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூற அவதரித்த மங்கையர் கோன் திருநெடுந்தாண்டகத்தில் (பா-26) * அறுகால சிறுவண்டே! தொழுதேனுன்னை * என்கிறார். வண்டுக்கு ஆறுகால்கள் உள்ளமை இயல்வாதலால் 'அறுகால' என்கிற விசேஷணம் இங்கு ஏதுக்கு? என்று விசாரம் நிகழ்ந்தது. இரண்டு காலாகவும் நான்கு காலாகவுமின்றியே விரைந்து செல்லுகைக் குறுப்பாக ஆறு கால்கள் இருக்கப்பெற்ற பாக்கியம் என்னேயென்று வியந்து கூறுவதாகச் சிலர் நிர்வஹித்தார்களாம். வண்டு செல்லுவதற்குச் சாதனம் சிறகேயன்றிக் கால்கள் அல்லவாதலால் 'அறு கால' என்னு மடைமொழிக்கு இங்ஙனே கருத்துரைப்பது சுவைக்கேடென்று திருவுள்ளம்பற்றிய பட்டர், தொழுதேனுன்னை யென்று அடுத்திருக்கும் வாக்கியத்திற்குச் சேர அருளிச்செய்வராம்; தூதுசென்று மீண்டுவந்தால் வண்டின் கால்களைத் தமது தலைநிறைய வைத்துக்கொண்டு கூத்தாடக்

குதுகலிக்கிறார் ஆழ்வார்; தம் தலையிலே வைப்பதற்கு ஆறு கால்களுண்டாகப் பெற்றதே! என்று வியந்து பேசுகிறார்—என்று. உண்மையில் வண்டின் கால்களையா ஆழ்வார் திருமுடிமீது கொள்ளப்பார்க்கிறார்! இதில் என்ன ரஸம்? இங்குள்ள மருமம் கேண்மின். திருவாய்மொழியில் *செங்காலமடநாராய்! திருமூழிக்களத்துறையும் கொங்கார் பூந்துழாய்முடி யென் குடக்கூத்தற்கு என் தூதாய் நுங்கால்களென்தலைமேல் கெழுமீரோ நுமரோடே* என்கிறார். எம்பெருமானிடம் தூது சென்று மீண்டுவந்து நுமரோடே கூட என் தலைமேல் கால்களை வைக்க வேணுமென்று ஸ்பஷ்டமாக ப்ரார்த்தித்திருக்கிறார். இங்கு நுமரோடே என்றதில் மிகச்சிறந்ததொரு சாஸ்த்ரார்த்தம் பொதிந்துள்ளது. *ஆசார்யவத் ஆசார்ய தாரேஷு ஆசார்யபுத்ரேபி வ்ருத்தி:, உச்சிஷ்டாசநவர்ஜம்* என்று மஹர்ஷி ஸூத்ரம். ஆசாரியர், அவருடைய தேவிகள், திருக்குமாரர் ஆக மூன்று வ்யக்திகள் உத்தேச்யர்களென்று சாஸ்த்ரம் சொல்லிற்று. எனவே ஆறு கால்கள் உத்தேச்யங்களாயின. இதை நம்மாழ்வார் "என் தலைமேல்—நும் கால்கள்-நுமரோடே கெழுமீர்" என்ற ஸ்ரீஸூக்திகளால் காட்டியருள, இதையே திருமங்கையாழ்வார் "அறுகால சிறுவண்டே தொழுதேனுன்னை" என்ற பாசுரத்தினால் தாம் அநுஸந்தித்தார்.

இப்படிப்பட்ட வேதாந்த விழுப்பொருள்கள் ஆழ்ந்து அடங்கியிருப்பவையன்றோ நம் ஆழ்வாரருளிச்செயல்கள். ஆபாதத: பார்க்கும்போது நீர்வளத்தையும் நிலவளத்தையும் வருணிப்பதாகக்காணும் பாசுரங்களையும் ஆழ்ந்து நோக்கினால் எவ்வளவு அரிய பெரிய பொருள்கள் கிடைக்கின்றன! இதற்குமொன்று காட்டுவோம். சோழநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான புள்ளம் பூதங்குடியைப் பாடாநின்ற திருமங்கையாழ்வார் (5—1—2) *பள்ளச் செறுவில் கயலுகளப் பழனக் கழனியதனுட்போய், புள்ளுப் பிள்ளைக்கிரைதேடும் புள்ளம் பூதங்குடிதானே* என்றொரு பாசுரம் பாடியுள்ளார். நீர்நிலங்களில் மீன்களானவை மலிந்து துள்ளித் துள்ளி விளையாடுகின்றனவாம் கொக்கு முதலிய பறவைகள் அங்குச் சென்று தம் தம் குட்டிகளுக்கு உணவாகக்கூடிய மீன்களைத் தேடுகின்றனவாம். இப்பொருளே யிங்குற்றது. முற்காலத்தில் ஆலவாயுடையான் என்பானொரு தமிழன் பட்டரிடம் வந்து இதில் ஒரு கேள்வி கேட்டானாம்: "பள்ளச்செறுவில் கயலுகள என்றபோதே அவ்விடத்து வயல்களில் மீன்கள் அளவற்றுக் கிடப்பதாகத் தெரிந்து விட்டது: அப்படியிருக்க ஈற்றடியில் இரைதேடும் என்று எங்ஙனே சொல்லலாம்? மீன் அருமைப்பட்டிருந்தாலன்றோ அதைத் தேடவேண்டும். கொள்வார் தேட்டமாம்படி குறையற்றுக் கிடக்கும்போது தேடிப்பிடிப்பதாகச் சொல்லுவது பொருந்தாதன்றோ" என்று கேட்டான். அதற்குப் பட்டர் அருளிச்செய்ததாவது—பிள்ளாய்! நீ கற்றவனாயினும் சொற்போக்கு அறிந்திலை; "பிள்ளைக்கு இரை தேடும்" என்றுள்ளது காண்; அங்குள்ள மீன்கள் நிலமிதியாலே தூணும் துலாமும் போலே தடித்திருக்கும்: அவை பறவைக்குட்டிகளின் வாய்க்கு அடங்காவாகையால் உரிய சிறிய மீன்கள் தேடிப்பிடிக்க வேண்டுமத்தனையன்றோ என்றாராம். அவனும் கேட்டு மிக மகிழ்ந்து சென்றானாம்: இதிலிருந்து கிடைக்கிற ஆழ்பொருளை ஆசார்ய ஹ்ருதயத்திலும் அதன் வியாக்கியானத்திலும் ஆசாரியர்கள் எடுத்துக் காட்டுகிறார்கள். பெரியார்கள் சாஸ்த்ரார்த்தங்களை சிஷ்யர்களுக்கு உணர்த்தும்போது இளைஞர்களான சீடர்களுக்குப் பெரிய சாஸ்த்ரார்த்தங்களை யுணர்த்தினால் அது அவர்களுடைய நெஞ்சுக்கு அவகாஹிக்க மாட்டாதாகையினாலே அவர்கள் கொள்ளத்தகுந்தவளவாகச் சிறிய அர்த்தங்களாகப் பார்த்தெடுத்து உபதேசிக்கிற [அதாவது, மஹா சாஸ்த்ரார்த்தங்களையும் வெகு லலிதமாக உபதேசிக்கிற] தன்மையைத் தெரிவிக்கிறபடியென்று உள்ளுறை பொருள் காட்டினர். (தொடரும்.)

ஸ்ரீ:

# கோதைதமிழ்ச் சுவையமுதம்

---

*பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும் வேதமனைத்துக்கும் வித்தாகுங் கோதை தமிழாகிய திருப்பாவையில் பாசுரந்தோறும் வாக்கியந்தோறும் எழுத்துத்தோறும் விசேஷார்த்த வமுதங்கள் பொதிந்து கிடக்கின்றன; இவற்றை அடியேன் தென்மொழியிலெழுதிய நான்கு உரைகளிலும் வடமொழியிலெழுதிய விரிவுரையொன்றிலும் தெலுங்கு பாஷையிலெழுதிய தெளிவுரையொன்றிலும் ஸம்க்ஷிப்தமாகவும் விஸ்த்ருதமாகவும் விளக்கியிருக்கின்றேனெனினும் ஈண்டு விசேஷித்துச் சில அர்த்த ரத்னங்களை யளிக்கின்றேன். திருப்பாவைக்கு உயிர்நிலை ஆசாரியன் பெருமைகளை விவரிப்பதேயாகும். ஆண்டாள் நாச்சியார் திருமொழியில் "கொல்லையரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார் சொல்லும் பொய்யானால், நானும் பிறந்தமை பொய்யன்றே" என்றும், "விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்லபரிசு வருவிப்பரேல் அதுகாண்டுமே" என்றுமருளிச்செய்யும் முகத்தினால்—பகவத்ஸம்பந்தம் தனக்குப் பயன்படாதொழிந்தாலும் ஆசார்ய ஸம்பந்தம் பழுதுபடாதென்பதை விளங்க வைத்தவளாகையாலே இத்திருப்பாவையில் பாசுரந்தோறும் ஆசார்யப்ரபாவத்தையே உள்ளுறை பொருளாக அமைத்துப் பாடியுள்ளாள்.

இப்பிரபந்தத்திற்கு விஷயம் மார்கழி நீராட்டமென்பது. முதற்பாட்டு, மூன்றும்பாட்டு, நான்காம்பாட்டு, இருபதாம்பாட்டு இருபத்தாறும் பாட்டுகளில் நீராட்டத்தின் ப்ரஸ்தாவமிருந்தாலும், நீராடுவதற்குரிய இடத்திற்கு [அதாவது தடாகத்திற்கோ நதிக்கோ] இவ்வாய்ச்சிகள் சென்றதாக இல்லை. எல்லாருமாகக் கண்ணபிரான் ஸன்னிதியிலே சென்று சேர்ந்து *எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் உன்றன்னோடுற்றோமேயாவோம் உனக்கே நாமாட்செய்வோம்* என்று சொல்லி முடித்தார்கள். இதனால், பகவத் ஸன்னிதானத்தில் சென்று சேர்வதையே இவர்கள் நீராட்டமாக மறைத்துச் சொன்னார்களென்பது அறுதியிடலாயிற்று. இனி, வெறும் நீராட்டமென்னாதே மார்கழி நீராட்டமென்கையாலே ஆசார்ய ஸன்னிதியில் சென்று சேர்வதை அந்தரங்கப்பொருளாக அமைத்திருப்பது அறியக்கிடக்கின்றது.

எங்ஙனே யென்னில், மார்கழி யென்னுஞ்சொல் மார்க்கசீர்ஷ மென்கிற வடசொல்லின் விகாரமாய் அமைந்தது. மிருகசீர்ஷ நக்ஷத்திரத்தோடு கூடிய பௌர்ணமாஸியுள்ள மாதம் மார்க்கசீர்ஷமாஸமென்றபடி. மாதப் பெயர்கள் ஸௌரமாநரீதியிலும் சாந்த்ரமாநரீதியிலும் வழங்கப்படுகின்றன. மேஷம் விருஷபம் மிதுநம் இத்யாதிவ்யபதேசங்கள் ஸௌரமாநரீதி. சைத்ரம், வைசாகம், ஜ்யேஷ்டம் இத்யாதிவ்யபதேசங்கள் சாந்த்ரமாநரீதி. சித்திரை வைகாசி இத்யாதிகளான தமிழ் வழக்குக்களும் சாந்த்ரமாநரீதியையே அநுஸரித்தவை. சித்திரா நக்ஷத்ரமும் பௌர்ணமாஸியும் ஒன்று கூடினால் சைத்ரம். விசாகாநக்ஷத்ரமும் பௌர்ணமாஸியும் ஒன்று கூடினால் வைசாகம். மேல் ஒவ்வொன்றையும் இப்படியே பார்த்துக் கொள்வது. இவ்வகையில் மிருகசீர்ஷ நக்ஷத்திரமும் பௌர்ணமாஸியும் ஒன்று கூடினால் மார்க்கசீர்ஷமெனப்

